எக. அஞ்சுடர்நீள் வாண்முகத் தாயிழையு மாறிலா
வெஞ்சுடர்நீள் வேலானும் போதரக்கண்—டஞ்சி
யொருசுடரு மின்றி *யுலகுபா ழாக
விருசுடரும் போந்தனவென் றார்.†

எ-து சுரத்திடைச்சென்ற செவிலிக்குத் தலைமகனையுந் தலைமகளை யும் கண்டார் சொல்லிய வார்த்தையைத் தாங்கள் கேட்டார்க்குச்சொல்லி யாற்றுவித்தது.

இ-ள். அழகிய மதிபோன்ற நீண்ட ஒளியையுடைய முகத் தாயிழையும் எதிரில்லாத வெஞ்சுடர்நீள்வேலானும் இச்சுரத்தின்கண்ணேபோதரக் கண்டு அஞ்சி 'இருசுடரும் ஒருசுடருமின்றியே உலகும் பாழாம்வகை இரு சுடரும் அச்சுரத்தே போந்தன' என்று கண்டார் சிலர் சொன்னார்; எ-று. (க)

எஉ. முகந்தா மரைமுறுவ லாம்பல்கண் ணீல
மிகந்தார் விரல்காந்த ளென்றென்—றுகந்தியைந்த
மாழைமா வண்டிற்கா நீழல் வருந்தாதே
யேழைதான் செல்லு மினிது.

எ-து சுரத்திடைச்சென்ற செவிலியைத் தலைமகளைக்கண்டார் சொல்லி ஆற்றுவித்தது.

இ-ள். இவள்முகம் தாமரைமலர், இவள் முறுவலையுடையவாய் ஆம்பல் மலர், இவள்கண் நீலமலர், ஒன்றையொன்றொவ்வாது கடந்தார்ந்த விரல்கள் காந்தளரும்பு என்று கருதிக் காதலித்துப் பொருந்திய மாழைமா வண்டிற்குத் தக்க நீழலிலே வருத்தமின்றி நின்னுடைய ஏழை செல்லாநின்றாள் இனிதாக; எ-று. (கo)

எங. செவ்வாய்க் கரியகட் சிறுநுற் கௌாதுங்
கவ்வையாற் காணாது மாற்றாது—மவ்வாயர்
தார்த்தத்தை வாய்மொழியுந் தண்கயத்து நீலமு
மோர்த்தொழிந்தா ளென்பேதை யூர்ந்து.

---

* 'பிலகு' எனவும் பிரதிபேதம்.

† இஃது இடைச்சுரத்துக் கண்டோர்கூறிய வார்த்தையைக் கேட்டோ ராகச் சிலர் கூறியது' என்றார் நச்சினார்க்கினியரும். (தொல், அகத். ௪o).

எ-து முன்னொருநான் றுடன்போக்குவலித்துத் தலைமகனையுந் தலைமகளையும் உடன்படுவித்துப் பின்னை அறத்தொடுநிலை மாட்சிமைப்பட்டமையாற் றலைமகளைக் கண்டு தோழி உடன்போக்கு அழுங்குவித்தது.

இ-ள். *செவ்வாயின்கட் டார்த்தத்தைவாய்மொழியைக் கேளாதுங் கரிய கண்ணின்கட் டண்கயத்து நீலங்களின் றன்மைகளைக் காணாதும் அவ்வாயம் ஆற்றுதொழிவதனை யோர்த்துப் பின் புடன்போக்கை யொழிந்தாள் என்பேதை அலர்காரணத்தான் முன் புடன்போக்கை மேற்கொண்டு;* எ-று. (௧௧)

௭௪. *புன்புறவே சேவலோ டேல் பொருளன்று*
*லன்புற வேயுடையா ராயினும்—வன்புற்*
*றதுகா ணகன்ற வழிநோக்கிப் பொன்போர்த்*
*திதுகாணென் வண்ணா மினி.*

எ-து காமம் மிக்க கழிபடர்கிளவி; நிலத்தாற்பாலை; ஒழுக்கத்தான் நெய்தல்.

இ-ள். *புல்லியநிறத்தையுடைய பேடைப்புறவே! நின்சேவலோடேல் நினக்குக்காரியமன்றால்; எங்காதலர் எமக் கன்புமிகவுடையாராயினும் அவர் மன நெகிழாது வலியானதன்மையைப் பாராய்; அவர் தேரோடும்வந்து நீங்கிய வழிச்சுவடு நோக்கிப் பொன்னிறம் போர்க்கவந்த வண்ணமிதனைப் பாராய், இப்பொழுது;* எ-று. (௧௨)

௭௫. *எரிந்து சுடுமிரவி யீடில் கதிரான்*
*விரிந்து விடுகூந்தல் வெஃகாப்—புரிந்து*
*விடுகயிற்றின் மாசுணம் வீயுநீ ளத்த*
*மடுதிறலான் பின்சென்ற வாறு.*

எ-து மகட்போக்கிய தாய் சொல்லியது.

இ-ள். *அழன்று சுடாநின்ற பகலோனது ஒப்பில்லாக் கதிரான் மாசுணங்கள் முறுக்கிவிட்ட கயிறுபோலப் புரண்டழியும் அத்தம், விரிந்துவிட்ட கூந்தலையுடையாள் அடுதிறலான்பின் விரும்பிச்சென்ற வழி;* எ-று. (௧௩)

௭௬. *நெஞ்ச நினைப்பினு நெற்பொரியு நீளத்த*
*மஞ்ச லெனவாற்றி னஞ்சிற்று—லஞ்சிப்*
*புடைநெடுங் காதுறப் போழ்ந்தகன்று நீண்ட*
*படைநெடுங்கண் கொண்ட பனி.*

எ-து பொருள்வலித்த நெஞ்சிற்குச் சொல்லித் தலைமகன் செல வழுங்கியது.

இ-ள். என்னெஞ்சமே! இவளை ஆற்றுவிக்குஞ் சிலசொற்களைச் சொல்ல நினைக்கின்றாயாயின் இவளோதான் நெற்பொரியும் நீளத்தத்தைச்சொல்ல நினைப்பதற்குமுன்னே பிரிவினையஞ்சிற்றால்; புடைநெடுங்காதுறப் போழ்ந் தன்று நீண்ட படைநெடுங்கண்களும் பிரிவினையஞ்சிப் பனிகொண்டன: ஆதலான், நமக் கிவளைப் பிரியமுடியாது; எ-று. (௧௪)

௭௭. வந்தாற்றான் செல்லாமோ வாரிடையாய் வார்கதிரால்
வெந்தாற்போற் றோன்றுநீள் வேயத்தந்—தந்தார்
தகரக் குழல்புரளத் *தாழ்துகில்கை யேந்தி
மகரக் குழைமறித்த நோக்கு.†

எ-து வினைமுற்றிய தலைமகன் தலைமகளை நினைந்தவிடத்துத் தலை மகள் வடிவு தன்முன்னின்றாற்போல வந்துதோன்ற அவ்வடிவை நோக் கிச் சொல்லி ஆற்றுவிக்கின்றது.

இ-ள். கொண்டணிந்து நிறையப்பட்ட தகரத்தையுடைய குழல்கள் அசையத் தாழ்ந்து துகிலைக் கையானே ஏந்தி மகரக்குழை மறித்த நோக்குடனே நீ வந்தால் யாம் போகோமோ? அரிய இடையினையுடையாய்! நீயிரங்கவேண்டா; எ-று. (௧௫)

௭௮. ஒருகை யிருமருப்பின் மும்மதமால் யானை
பருகுநீர் பைஞ்சுனையிற் காணு—தருகல்
வழிவிலங்கி வீழும் வரையத்தஞ் சென்றா
ரழிவில ராக வவர்.

எ-து ஆற்றாளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவல் என்பதுபடச் சொல்லியது.

இ-ள். ஒருகையினையும் இருகோட்டினையும் மூன்றுமதத்தினையும் உடைய மால்யானைகள் பருகுநீரைப் பைஞ்சுனையின்கட் காணுவாய் மருங்கே வழிவிலங்கித் தளர்ந்துவீழும் வரைகளையுடைய அத்தத்தைச் சென்ற அவர் அவ்வழி இடையூறின்றி அழிவிலராக; எ-று. (௧௬)

---

* 'தாழ்கலையை' எனவும் பிரதிபேதம்.

† இஃது உருவுவெளிப்பாடு. நின்னொடுபோதுவேனென்று அவளை ஆற்றுவித்தது. திணை பாலையிற்பாலையென்றார்: நச்சினார்க்கினியர் (தொல். அகத். ௪௦).

எகூ. சென்றார் வருதல் செறிதொடி சேய்த்தன்று
னின்றார்சொற் றேறுதாய் நீடின்றி—வென்று
றெடுத்த கொடியி னிலங்கருவி தோன்றுங்
கடுத்த மலைநாடு காண். முமே.

எ-து பருவங்காட்டித் தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

இ-ள். நம்மைப் பிரிந்துபோயினார் வருதல் செறிதொடி! சேய்த்தன்றால், நின்மாட்டுநின்றொழுகுகின்றாருடைய சொற்களைத் தெரியாதாய் போரின்கண் வென்றெடுத்த கொடிகள்போலத் தெளிந்திலங்கருவி தோன்றாநின்றது மிக்க மலைநாடாதலால் நீடின்றி யின்றே யிரவின்கட் காண்பாயாக; எ-று. (கஎ)

அ௦. உருவவேற் கண்ணா யொருகாற்றேர்ச் செல்வன்
வெருவிவீந் துக்கநீ ளத்தம்—வருவர்
சிறந்து பொருடருவான் சேட்சென்றா ரின்றே
பிறந்துகண் ணாடு மிடம். தம்ப.

இதுவுமது.

இ-ள். அஞ்சத் தக்க வேல்போன்ற கண்களையுடையாய்! ஒரு காலை யுடைய தேர்ச்செல்வனார் பிறர் கண்டார் வெருவும்வகை வீந்தவிந்த கானந் தானே முயற்சியாற் சிறந்து பொருடருவான்வேண்டிச் சென்றவர் இன்றே வருவர்; மிகுதுக் கண் இடமாடாநின்றது; எ-று. (கஅ)

அக. கொன்றாய் குருந்தே கொடிமுல்லாய் வாடினீர்
நின்றே னறிந்தே னெடுங்கண்ணாள்—சென்றாளுக்
கென்னுரைத்தீர்க்கென்னுரைத்தாட்கென்னுரைத்தீர்க்கென்னுரைத்தாண்
மின்னனிரைத்த பூண்மிளிர விட்டு.

எ-து தலைமகள் இற்செறிப்புக் கண்டபின்னை அவர் நீங்கிய புனங்கண்டு ஆற்றாய் மீள்கின்ற தலைமகன் சொல்லியது. சுரத் திடைச்சென்ற செவிலித்தாய் சொல்லியதூஉமாம்.

இ-ள். கொன்றாய் குருந்தே கொடிமுல்லாய் நீர் வாடிநின்றீர்: இதற்குக் காரணம் யானறிந்தேன்: நெடுங்கண்ணாளிங்குநின்று போனன்றாட்கு நீரென் னுரைத்தீர்? நுமக்கு அவளென்னுரைத்தாள்? அவட்கு நீர் பின்னை என் னுரைத்தீர்? அவள் உமக்குப் பின்னை என்னுரைத்தாள்? மின்னனிரைத்த பூண் விட்டுமிளிராநின்று; எ-று. (கக)

௫உ. ஆண்கட னுமாற்றை யாயுங்கா லாடவர்க்குப்
பூண்கடனுப் போற்றிப் புரிந்தமையாற்—பூண்கடனுச்
செய்பொருட்குச் செல்வாராற் சின்மொழி நீசிறிது
நைபொருட்கட் செல்லாமை நன்று.

எ-து தலைமகனது செலவுக்குறிப்பறிந்து ஆற்றளாய தலைமகளைத் தோழி உலகினதியற்கை கூறி ஆற்ற துடன்படுத்துவித்தது.

இ-ள். ஆள்வினைக்கடனாகிய நெறியை ஆராயுங்கால், ஆடவர்க்குப்பூணுங்கடனாகப் பாதுகாத்து நல்லார் சொல்லி மேவினமையாற் நமக்கு அவ்வாள்வினையுங்கடனாகத் தேடும்பொருட்குச் செல்வர் நங்காதலர்: ஆதலாற் சின்மொழியையுடையாய்! நீ யதற்கு மனனழியுந் திறத்தின்கட் செல்லாமை நன்று; எ-று. (உ0)

௫௩. செல்பவோ சிந்தனையு மாகாதா னெஞ்செரியும்
வெல்பவோ சென்றார் வினைமுடிய—நல்லா
யிதடி கரையுங்கன் மாபோலத் தோன்றிச்
சிதடி கரையுந் திரிந்து.

எ-து தலைமகன்செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் உடன்டாது சொல்லியது.

இ-ள். இப்பெற்றித்தாகிய சுரத்தின்கட் செல்வாருளரோ? நினைத்தலுமாகாதால்: நினைத்த நெஞ்சம் எரியும்: மாறிச் சுரத்தின்கட் சென்றார் சுரத்தை வல்லவல்லரோ? தாமெடுத்துக்கொண்ட வினை முடியும்படி ; நல்லாய்! காட்டருமைப்போத்துக்களைப் பிரிந்த பெண்ணெருமைகள் கதறாநிற்கும்: அங்குப் லவாய்க்கிடந்த கற்களும் மா பறந்தாற்போலத்தோன்றும் : சின்வீடுகளும் ரிந்து கதறாநிற்கும் ஆதலான்; எ-று. (உக)

௫௪. கள்ளியங் காட்ட கடமா விரிந்தோடத்
தள்ளியுஞ் செல்பவோ தம்முடையார்—கொள்ளும்
பொருளில ராயினும் பொங்கெனப்போந் தெய்யு
மருளின் மறவ ரதர்.

இதுவுமது.

இ-ள். கள்ளியங்காட்டின்கட் கடமாக்கள் இரிந்தோடும்வகை மறந்துஞ் செல்வரோ தம்மறிவையுடையார்: வழிபோம் வம்பலராற் கொள்ளும் பொருளிலராயினும் கதுமெனப் போந்தெய்கின்ற அருளில்லாத மறவர் வாழும் வழியை; எ-று. (உஉ)

அ௫. பொருள்பொரு ளென்றார்சொற் பொன்போலப் போற்றி
யருள்பொரு ளாகாமை யாக—வருளான்
வளமை கொணரும் வகையினான் மற்றே
யிளமை கொணர விசை.

எ-து தலைமகனைத் தோழி செலவழுங்குவித்தது.

இ-ள். பொருள் பொருளாவதென்று சொன்னார் சொல்லைப் பொன்போல விரும்பித்தெளிதலான், அருளுடைமை பொருளாகாமை ஆவதாயினும் ஆக; பொருளைக்கொணரும்வகைமைபோல நின்னருளினாலே வேறே யிளமை கொணர்தற்கு எமக்குடன்படுவாயாக; எ-று. (உ௩)

அ௬. ஒல்வா ருளரே லுரையா யொளியாது
செல்வாரென் றாய்நீ சிறந்தாயே—செல்லா
தசைந்தொழிந்த யானை பசியாலாட் பார்த்து
மிசைந்தொழியு மத்தம் விரைந்து.

எ-து தலைமகள் தோழிக்குச் செலவுடன்படாது சொல்லியது.

இ-ள். ஆற்றுவாருளராயின் அவர்பிரிவின் அவர்கட்குரையாய் தவிராதே நங்காதலர் செல்வாரென்றாய ஆதலால் நீ யெனக்கு மெய்யாகச் சிறந்தாயே யன்றே; போகமாட்டாதே வருந்தி யிறந்துவீழ்ந்த யானைகளை அங்குள்ள வர்கள் தம்பசியாலே எங்கும்பார்த்துத் தின்றுபோம் அத்தத்தினை விரைந்து; எ-று. (உ௪)

அஎ. ஒன்றானு நாமொழிய லாமோ செலவுதான்
பின்றாது பேணும் புகழான்பின்—பின்றா
வெலற்கரிதாம் வில்வலான் வேல்விடலை தாங்காச்
செலற்கரிதாச் சேய சுரம்.

எ-து புணர்ந்துடன்போக்கு நயப்பித்த தோழிக்குத் தலைமகள் உடன்பட்டுச் சொல்லியது.

இ-ள். பிறழாத வெலற்கரிதாகிய வில்லினை வல்லனாகிய வேல்விடலை தான் துணையாகச் சுரத்தைச் செலற்கரிதாக யாதானுஞ் சொல்லலாமோ? அப் பேணும் புகழான்பின் சேறல் ஒழுக்கத்திற் பிறழாதுகாண்; எ-று. (உ௫)

அஅ. அல்லாத வென்னையுந் தீரமற் றைபண்மார்
பொல்லாத தென்பது நீபொருந்தா—யெல்லார்க்கும்
வல்லி யொழியின் வகைமைநீள் வாட்கண்ணாய்
புல்லி யொழிவான் புலர்ந்து.

எ-து புணர்ந்துடன்போவா னெருப்பட்ட தலைமகன் தோழிக்குச் சொல்லியது.

இ-ள். எம்பெருமானோடு பொருந்தி இங்குநின்றும் ஒழிந்து போதற்கு அன்பு வேறுபட்டு மற்றதன்கண் அல்லாத வென்னை நீ யிங்கேயிருந்து நம் ஐயன்மார் பொல்லாதவென்றுகொள்ளும் மனத்தின்கண்ணுள்ள கோளினையுந் திருத்தி நீபொருந்தாய் எல்லார்க்கும் தத்தமனத்தின்கணுள்ள வேறுபாடொழிபு யின் வல்லிபோன்றிரு வாட்கண்ணாய்; எ-று.

அல்லதூஉம், உடன்போகின்ற என்னைப் புல்லிக்கொண்டொழிவான் வேண்டி மனத்தின்கட் புலந்து நீங்குதற்கு வல்லையாயொழியின் வகைமையை உடைய நீண்ட வாட்கண்ணாய்! ஆண்மையல்லாத வுரைகளை என்னைநீக்கி ஐமையன்மார் பொல்லாத தென்னுங் கருத்தினையும் நீக்கி எல்லார்க்கும் பொருந்துவாயாக; என்றுமாம். (உசு)

கூ. நண்ணிநீர் சென்மி னமரவ ராபவே
லெண்ணிய வெண்ண மெளிதரோ—வெண்ணிய
வெஞ்சுட ரன்னானை யான்கண்டேன் கண்டாளாந்
தண்சுட ரன்னாளைத் தான்.*

எ-து சுரத்திடைச் சென்ற செவிலிக்குத் தலைமகனையுந் தலைமகளையுங் கண்டமை எதிர்ப்பட்டார் சொல்லி ஆற்றுவித்தது.

இ-ள். பொருந்தி நீர் சென்மின்: அவரும் நமக்குச்சுற்றத்தாராயின் நீர் அவரைச் சென்றெய்தவேண்டுமென்று எண்ணிய எண்ணம் எளிது: நீர் கருதிய வெய்ய பகலோனன்னானை யான்கண்டேன், கண்டாளாம் தண்மதி அன்னையாளை யிவள்தான்; எ-று. (உஎ)

௩0. வேறாக நின்னை வினவுவேன் றெய்வத்தாற்
கூறுபோ கூறுங் குணத்தினாய்—வேறாக

* "மீண்டா ரெனவுவந் தேன்கண்டு நும்மையிம் மேதகவே, பூண்டா ரிருவர்முன் போயின ரேபுலி யூரெனைநின், றாண்டா னருவரை யாளியன் னானைக்கண் டேனயலே, தூண்டா விளக்கனை யாயென்னை யோவன்னை சொல்லியதே" என்னும் திருச்சிற்றம்பலக்கோவையினையும் (உசச) ஈண்டைக்கு நோக்கிக் கொள்க.

வெம்மனைக் கேறக் கொணருமோ வெல்வளையைத்
தன்மனைக்கே யுய்க்குமோ தான்.*

எ-து † 'தன்னு மவனும்' என்பதனுள் 'நன்மை தீமை' என்பத
னல் நற்றாய் படிமத்தாளை வினயது.

இ-ள். நிமித்தஞ்சொல்வார்பலருள்ளும் நின்னை வேறாகக்கொண்டு
வினவாநின்றேன்: உன்னுடைய தெய்வததன்மையுடைய கழங்காற் பார்த்துக்
கூறாய்; உலகத்தார் கூறும் நற்குணத்தினையுடையனாய் எல்வளையை உடன
கொண்டுபோனவன் என்மனைக்கே மணஞ்செய்வதாகக் கொண்டுவருமோ?
அஃதன்றி யாம்வேறாகத் தன்மனைக்கே மணஞ்செய்யக் கொண்டுபோமோ
தான்; எ-று. (உஅ)

௩௧. கள்ளிசார் காரோமை நாரில்பூ நீண்முருங்கை
நள்ளியவேய் வாழ்பவர் நண்ணுபவோ—புள்ளிப்
பருந்து கழுகொடு வம்பலர்ப் பார்த்தாண்
டிருந்துறங்கி வீயு மிடம்.

எ-து தலைமகன்செலவுடன்படாததலைமகள் தோழிக்குச் சொல்
லியது.

மு-ள். புள்ளிய பருந்துகள் கழுகுடனே வழிபோவாரைப்பார்த்து அங்
கிருந்துறங்கபபட்டுக் கள்ளிபுஞ் சாருங் காரோமையும் நாரில்பூநீண்முருங்கை
யும் வேயும் பொருந்தியமர்ந்து வீயுமிடத்தை உயிர்வாழ்பவர் நண்ணுவரோ;
எ-று. (உகூ)

௩௨. செல்பவோ தம்மடைந்தார் சோழியச் ‡சிஃறிவன்றிக்
கொல்பபோற் கூப்பிடும் வெங்கதிரோன்—மல்கிப்
பொடிவெந்து பொங்கிமேல் வான்சுடுங் கீழா
லடிவெந்து கண்சுடு மாறு.

---

* 'அருஞ்சுர மிறந்த' என்னும் அகப்பாட்டினுள்ளும் 'ஆகுவ தறியு
முதுவாய் வேல, கூறுக மாதோ நின்கழங்கின் றிட்ப, மாறாது வருபனி கழுமுங்
கங்குலி, ஞறைது துயருமென் கண்ணினிது படீஇய, வெம்மனை முந்துறத்
தருமோ, தன்மனை யுய்க்குமோ யாதவன் குறிபபே' என வருதல் காண்க.

† "தன்னு மவனு மவளுஞ் சுட்டி, மன்னு நிமித்த மொழிபபொரு
டெய்வ, நன்மை தீமை யச்சஞ் சார்தலென், றன்ன பிறவு மவறறொடு
தொகைஇ" என்பது தொல்காப்பியம். (அகத். ௩௪)

‡ 'சிற்றுவன்றி' எனவும் பிரதிபேதம்,

22226

இதுவுமது.

இ-ள். தம்மையடைந்தார் சீர்மையழிய நல்லார் செல்வரோ? சிள்வீடுகள் நெருங்கிக் கடியவோசையாற் பிறரைக் கொல்வனபோலக் கூப்பிடாநிற்கும் வெய்ய வெயிலோன் மிகுதுப் பொடிகள் வெந்து பொங்கி மேலே விசும்பினைச் சுடாநிற்கும், கீழின்கண் வழிபோவார் அடி வேவ அவர் கண்களைச் சுடாநிற்கும் இப்பெற்றிப் பட்ட அவ்வழியினை; எ-று. (௩௦)

பாலை முற்றியது.

---

## ௪-முல்லை.

---

௯௩. கருங்கடன் மாந்திய வெண்டலைக் கொண்மூ
விருங்கடன்மா கொன்றான்வேன் மின்னிப்—*பெருங்கட
றன்போன் முழங்கித் தளவங் குருந்தணைய
வென்சொல்பா ஆற்றும் வகை.

எ-து பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்குரைத்தது.

இ-ள். கருங்கடலைப் பருகிய வெண்டலைமுகில்கள் இருங்கடலின்கண்ணே புக்கு மாவினைக்கொன்ற முருகன்வேல்போல மின்னிப் பெருங்கடலன்னைப்போல முழங்குதலால் முல்லைகொடிகளெல்லாம் குருந்தமரத்தின் மேற்சென்றணையக்கண்டு யான் ஆற்றுந்திறம் என்னைகொல்லோ? எ-று. (௧)

௯௪. பகல்பருகிட் பல்கதிர் ஞாயிறுகல் சேர
விகல்கருதித் திங்க ளிருளைப்—பகல்வா
வெண்ணிலாக் காலு மருண்மாலை வேய்த்தோளா
யுண்ணிலா தென்னுவி யூர்ந்து.

இதுவுமது.

இ-ள். பகற்பொழுதைப் பருகிப் பல்கதிர்ஞாயிறு மலையின்கட்சேரத் திங்களானது இருளைப் பகையென்றுகருதிப் பகலின்றன்மைவர வெண்ணிலாவையுகாநின்ற மருண்மாலையின்கண், வேய்த்தோளாய்! என்னிடத்து நிலைநின்றதில்லை, என்னுயிர் சென்று : எ-று. (௨)

---

* 'பொருங்கடல்' பிரதிபேதம்.

கரு மேனோக்கி வெங்கதிரோன் மாந்தியநீர் கீழ்நோக்கிக்
கானொக்குங் கொண்டமூகாக் காண்மடவாய்—மானோக்கி
போதாரி வண்டெலா நெட்டெழுத்தின் மேற்புரியச்
சாதாரி நின்றறையுஞ் சார்ந்து.

எ-து தோழி தலைமகளைப் பருவங்காட்டி வற்புறுத்தியது.

இ-ள். வெங்கதிரோன் மேனோக்கிப் பருகியநீர் கீழ்நோக்குதலால் காடெல்லாம ஒக்கங்கொண் டமூகாகப் போதுதோறும அரிவண்டுகள் நெட்டெழுத்தோசைமேல் மேவிச சாதாரியென்னும் பண்ணினைச் சார்ந்தொலியா நின்றன; மானோக்கி இதனைக காணாய், எ-று.

அல்லதூவும் 'போதாரி வண்டெலாம' என்பது போதினைப்பாந்து இவ் வண்டெல்லாம என்றவாறு (௩)

கசா. இருள்பாந் தாழிபான் றன் னிறம்போற் றம்மு
னருள்பாந்த வாய்நிறம் போன் று—மருள்பாந்த
பால்போலும் வெண்ணிலவும் பையா வல்குலாய்
வேல்போலும் வீழ்துணையி லார்க்கு.

எ-து மாலைப்பொழுதுகண்டு ஆற்றளாய தலைமகள் தோழிக்குச் சொல்லியது

இ-ள். சக்காத்தையுடைய மாயவனிறமபோல எங்கு மிருள் பாந்து, அம்மாயவன்முன்னோனுடைய நிறம்போன்று வியப்புமிக்க பானிறமும்போன்ற வெண்ணிலாவும், பையரவலகுலாய்' இவை விரும்பபபடுந்துணையில்லாதார்க்கு வேல்போலும்; எ-று. (௪)

கரு. பாழிபோன் மாயவன்றன் பற்றார் களிற்றெறிந்த
வாழிபோல் ஞாயிறு கல்சேரத் —தோழிபோ
மான்மாலை தம்மு னிறம்போன் மதிமுளைப்ப
யான்மாலை யாற்றேனினைந்து.

இதுவுமது.

இ-ள். தனக்கு வலிபோலக் கருதி மாயோன் பற்றார்களிற்றின்முகத் தெறிந்த சக்கரம்போல ஞாயிறு குடமலைபைச் சோத் தோழி! மருண்மாலையின் கண் அம்மாயவன்முன்னோன் நிறமபோல மதி தோன்றுதலான் யான்கொண்ட மயலை ஆற்றமாட்டுகில்லேன் வருந்தி; எ-று. (௫)

கூஅ. வீயும் வியப்புறவின் வீழ்துளியான் மாக்கடுக்கை
நீயும் பிறரொடுங்கா ணீடாதே—யாயுந்
தழலாகிப் பொன்வட்டாய்க் தாராய் மடலாய்க்
குழலாகிக் கோல்சரியாங் கூர்ந்து.

எ-து பருவமன்றென்று வற்புறுத்தியதோழிக்குத் தலைமகள் வன்புறையெதிரழிந்து சொல்லியது.

இ-ள். ஆபப்படுந் தழல்போல அரும்பிப் பொன்வட்டுப் போல முதிர்ந்து பின்னைப் பூமாலையாய் இதழாய்விரிந்து மடவார்குழல்போலக்காய்த்துப் பின்னைத் துலையையுடைய கோலாய் மிக்கு அழியாநின்றன, வியன்புறவின்கண்ணே வீழ்துளியானே பெருங்கொன்றைகள்: இதனைப் பிறரோடே நீ போய் நீயுங் காணாய் நீடியாதே; எ-று. (சு)

கூகூ. பொன்வாளாற் காடில் கருவரை போர்த்தாலு
மென்வாளா வென்றி யிலங்கெயிற்ற—வென்வாள்போல்
வாளிழந்த கண்டோள் வனப்பிழந்த மெல்விரலு
நாளிழந்த வெண்ணிக் கு நைந்து.

இதுவுமது.

இ-ள். பொன்போன்ற வெயிலொளியால் வெந்து காடின்றியிருந்த கருவரைகள் கார்ப்பருவஞ்செய்து மலரிதழ்களான் மூடப்பட்டாலும் அதனாற் பயனென்? பருவமன்றென்றுசொல்லி வாளாநின்றி; இலங்கெயிற்றை யுடையாய்! என் மேனியின்கண்ணுள்ள ஒளிபோல ஒளி யிழந்தன என் கண்களும்: போயிழந்தநாள்களினெண் மிகுதலான் எண்ணி என் விரல்களுந்தேய என்றோள்களும் வனப்பிழந்தன; எ-று.

இதனுள் வாளா என்பது பயனின்மையைக் காட்டுவதோர் இடைச்சொல். (எ)

க00. பண்டியையச் சொல்லிய சொற்பழுதான் மாக்கடல்
கண்டியைய மாந்திக்கால் வீழ்த்திருண்—டெண்டிசையுங்
கார்தோன்றக் காதலர் தேர்தோன்றா தாகவே
பீர்தோன்றி நீர்தோன்றுங் கண்.

எ-து பருவங்கண்டழிந்த கிழத்தி தோழிக்குச் சொல்லியது.

இ-ள். தா முன்பு நம்மைப் பிரிகின்றநாட் குறிப்படச்சொல்லிய சொற்பழுதாயிற்றால்: பெருங்கடற்சென்று கண்டு நிரம்பப்பருகிக் கால்வீழ்த்தேயிருண்டு திசையெட்டு மழைதோன்றக் காதலர் தேர் தோன்றுகின்றதில்லை ஆதலால் என கண்கள் பீர்தோன்ற நீர்தோன்றாநின்றன; எ-று. (அ)

௧௦௧. வண்டினம் வெளவாத வாம்பலும் வாரிதழான்
வண்டினம் வாய்வீழா மாலையும்—வண்டின
மாராத பூந்தா ரணிதேரான் றன்போத
வாராத நாளே வரும்.

இதுவுமது.

இ-ள். வண்டினங்கள் விரும்பாத *ஆம்பலென்னும் பெயரையுடைய குழலும், ஒழுங்கிய மலர்களிற்புக்கு வண்டினங்கள் வாய்வீழாத அந்தியாகிய மாலையும், வண்டினங்கள் புக்கொலியாத பூச்செயல்களையுமுடைய புரவிபூண்ட தார்மணிகளையுடைய புரவிகளாலே ஒப்பிக்கப்பட்ட தேரினையுமுடையான் வாராதநாளே வந்து என்னை நலியும்; எ-று. (௯)

௧௦௨. மானெங்குந் தம்பிணையோ டாட மறியுகள
வானெங்கும் வாய்த்து வளங்கொடுப்பக்—கானெங்குந்
தேனிறுத்த வண்டோடு தீதா வெனத்தேரா
தியானிறுத்தே னாவி யிதற்கு.

இதுவுமது.

இ-ள். மான்கள் தம்பிணைகளைக்கூடி எங்கும் விளையாட அவற்றின் மறிகளுழுகள மழையெங்கும்பெய்து வாய்த்து வளங்கொடுப்பக் காடெங்குந் தேன்களும் தம்மொடுசேர்ந்த வண்டுகளோடு தீதாவென்றொலித்தலான், ஆராயாதே மயங்கிப் பருவத்துக் கென்னாவியைக் கடனாகக்கொடுத்தேன்; எ-று. (௧௦)

௧௦௩. ஒருவந்த மன்றா லுறைமுதிரா நீராற்
கருமந்தான் கண்டழிவு கொல்லோ—பருவந்தான்
பட்டின்றே டென்றி பணைத்தோளாய் கண்ணீரா
லட்டினே னாவி யதற்கு.

எ-து பருவமன்றென்று வற்புறுத்தின தோழிக்குத் தலைமகள் பருவமேயென் றழிந்துசொல்லியது.

இ-ள். ஒருவந்தமன்றால் என்பது இது பருவமென்பது மெய்ம்மை யன்றாலென்றவாறு. உறைமுதிராநீரால் என்பது மழைபெயல் நிரம்பாத

* “கஞ்சத்தாற் குழுதவடிவாக அணைசுபண்ணிச்செறித்தலின் ஆம்பற் குழலாயிற்று” என்பர் அடியார்க்குநல்லார் (சிலப்-ஆய்ச்சியர்குரவை).

ராலென்றவாறு: வம்பமழை என்றவாறும். கருமந்தான் கண்டழிவுகொல்லோ ன்பது கருமமாவது பருவமல்லாதபருவத்தைக்கண் டழிவதோ என்றவாறு. நவந்தான் பட்டின்றே யென்பது பருவம் வந்துபட்டதில்லை என்றவாறு. ன்றி என்பது இவையெல்லாஞ் சொல்லி என்னைத் தேற்றுநின்றாய் என்ற ாறு. பணைத்தோளாய் கண்ணீரா லட்டினே னுவி யதற்கு என்பது கண் ரீரே நீராகவார்த்து என்னுயிரைப் பருவத்துக்குக் கொடுத்தேன் பணைத் தாளாய்! எ-று. (௧௧)

௧0௪. ஐந்துருவின் வில்லெழுதி நாற்றிசைக்கு முந்நீரை
யிந்துருவின் மாந்தி யிருங்கொண்மூ — முந்துருவி
னொன்று யுருமுடைத்தாய்ப் பெய்வான்போற் பூக்கென்று
கொன்றாய்கொன் றாபெற் குழைத்து.

எ-து பருவங்கண்டழிந்த கிழத்தி கொன்றைக்குச் சொல்லுவா ளாய்த் தோழிகேட்பச் சொல்லியது.

இ-ள். ஐந்துநிறத்தினையுமுடைய வில்லையெழுதினாற்போலக் கோலி முந்நீரைப்பருகி ஈந்தின்கனிபோன்றநந்துகின்ற வுருவொடு இருங்கொண்மூ ாற்றிசைக்கண்ணும் ஒன்று யுருமுடைத்தாய்ப் பெய்யப்படுகின்றனவானம் என்னைக்கொல்கின்றாற்போலத் தழைத்தும் பூப்பேனென்று என்னைக்கொன் றாய்; கொன்றைமரமே! எ-று. (௧௨)

௧0௫. எல்லை தருவான் கதிர்பருகி யீன்றகார்
கொல்லைதரு வான்கொடிக ளேறுவகாண் — முல்லை
பெருந்தண் டளவொடு தங் கேளிரைப்போற் காணாய்
குருந்தங் கொடுங்கழுத்தங் கொண்டு.

எ-து பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

இ-ள். பகலினைத்தருங் கதிரோனுடைய கதிர்கள் நீரை நிலத்தின்கட் பருகி யீன்ற காரானே கொல்லைகள் தருகின்ற வாலிய கொடிகண் மரந்தோறுஞ் சென்றேறுவனவற்றைக் காணாய்! அன்றியேயும் முல்லைகள் பெருந்தண்டள வுடனே குருந்தங் கொடுங்கழுத்தங்கொண்டு தங்கேளிரைப்போ லேறுவன காணாய்! எ-று. (௧௩)

௧0௬. என்னரே யேற்ற துணைப்பிரிந்தா ராற்றென்பா
ரன்னரே யாவரவர்க்கு — முன்னரே
வந்தாரந் தேங்கா வருமுல்லை சேர்தீந்தேன்
கந்தாரம் பாடுங் களித்து.

எ-து வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் வன்புறையெதி ரழிந்துசொல்லியது.

இ-ள். என்னரேயேற்ற துணை பிரிந்தார் என்பது எப்பெற்றியர் அவர் தமக்கன்புபட்ட காதலரைப்பிரிந்தார் என்றவாறு. ஆற்றென்பா ரன்னரேயாவ ரவரவர்க்கு என்பது அக்காதலித்தாரைப் பிரிந்தாரோ டொப்பர், பிரியப் பட்டார்க் காற்றி இறந்துபடாதிருக்கச் சொல்லுவார் என்றவாறு. முன்னரே வந்தாரந் தேங்கா வருமுல்லை சேர்தீந்தேன் கந்தாரம்பாடுங் களித்து என்பது எனக்கு முன்னேவந்து சந்தனப் பொழிலையும் தேங்காவின்கண்வளர் முல்லை களையுஞ் சேர்ந்த தீந்தேன்கள் கந்தாரமென்னும் பண்ணினைக் களித்துப் பாடா நின்றன; எ-று. (கசு)

கoஎ. கருவுற்ற காயாக் கணமயிலென் றஞ்சி
யுருமுற்ற பூங்கோட லோடி—யுருமுற்ற
வைந்தலை நாகம் புரையு மணிக்கார்தா
னெந்தலையே வந்த தினி.

எ-து பருவங்கண்டழிந்த கிழத்திக்குத் தோழி சொல்லியது.

இ-ள். கருக்கொண்டு பூத்த காயாம்பூவினைத் தொகுதியையுடைய மயி லென்றஞ்சி உருமுற்ற ஐந்தலைநாகங்கள் உருமுற்ற பூங்கோடல்களையொவ்வா நின்ற அழகிய இக்கார்ப்பருவந்தான், எம்முடையமாட்டே நலியவந்தது இப்பொழுது; எ-று. (கஎ)

கoஅ. கண்ணுளவாயின் முல்லையல்லை காணலா
மெண்ணுள வாயி னிறவாவா—லெண்ணுளவா
வன்றொழிய நோய்மொழிச்சார் வாகா துருமுடைவா
னொன்றொழிய நோய்செய்த வாறு.

எ-து பருவம் அன்றென்று வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் ஆற்றாது சொல்லியது.

இ-ள். உருமுடைவான் ஒன்றொழிய நோய்செய்தவாறு கண்ணுளவா யின் முல்லையல்லை காணலாம் என்பது உருமுடைய வான் *இறந்துபா டொன்றையும் ஒழிய மற்றைக் குறிப்புக்கள் ஒன்பதும் எனக்குளவாம்படி

* இவற்றைத் தசாவத்தை என்ப வடநூலார். அவை அன்பொடுபோர்த் தல், உளங்கொடுபெற்றல், புணர்வுவேட்கை, துயிலறுதல், மெலிதல், புலநுகர் வொழிதல், நாணழிதல், புலம்பல், மயக்கம், இறந்துபடுதல் என இவை.

ன்னை நோய்செய்தவாற்றை நினக்குங் கண்ணுளவாயின் *முல்லையல்லை ர்தலின் நகருக்காண் எ-று. எண்ணுளவாயின் இறவாவால் என்பது அவர் றித்த இத்துணைநாளுள் வருகின்றேன் என்ற எண் பழுதுபடாவாயின் அவர் சான்னநாளைக் கடவா அன்றே எ-று. எண்ணுளவாவன்றொழிய நோய் மாழிச் சார்வாகாது என்பது என்னை ஆற்றுவிக்கவேண்டி நின் மனத்தின்கண் ண்ணின எண்ணின்கணுள்ளவாவன்றி என்னேயொழிதற்கு நீ யாற்றுவிக் ன்ற நின்மொழி எனக்குச் சார்வாகாது ; எ-று. (கசு)

கOகூ. என்போ லிருளை யிருங்கடன் மாந்திபகார்
பொலபோற்றா் கொன்றை புரிந்தன—பொன்போற்
றுணைபிரிந்து வாழ்கின்றார் தோன்றுவர் தோன்று
ரிணைபிரிந்து வாழ்வ ரினி.

எ-து பருவங்கண்டு ஆற்றளாய தலைமகள் தோழிக்குச் சொல்லி பது.

இ-ள். என்னைப்போன்றதோழி! பொன்போன்ற தார்களைக் கொன்றை ன் ஈனும்வகை இருங்கடலைப்பருகின முகில்களாதலாற் பொன்போலப் பெறுதற்கரிய தந்துணைகளைப் பிரிந்துபோய் வாழ்கின்றார் அத்துணைக்கண் மாட்டுத்தோன்றுவர் ; நம்மோடிணைதலைப்பிரிந்துவாழ்கின்றார் இப்பருவத்தின் கண்ணுந் தோன்றுகின்றிலர் ; எ-று. (கஎ)

ககO. பெரியார் பெருமை பெரிதே யிடர்க்கா
ணரியா ரெளியரென் றாற்றாப்—பரிவாய்த்
தலையழுங்கத் தண்டளவந் தாநகக்கண் டாற்று
மலையழுத சால மருண்டு.

இதுவுமது.

இ-ள். பெரியாராயிருப்பார் பெருமைக்குணம் மெய்ம்மையாகப் பெரிதே; காண முன் னரியாராயுள்ளார் இடர் வந்த இப்பொழுது எளியாராயினரென் றிரங்கி யழுங்கி ஆற்றுவாய் மலைகள் மிகவும் அழுதன, தலைசாய்க்கும் வகை பரிவாய்த்தண்டளவங்கள் தஞ்சிறுமையால் நகக்கண்டு ; எ-று. (கஅ)

---

* முல்லை கண்ணிலவாதலின் என்னை நோய்செய்தவாற்றைக் காணாது நகுவன. நீயும் அதுபோல நகுவையேனும் கண்ணுண்மையால் முல்லை யகலை யாதலின், நக்கே யொழியாது நோய்செய்தவாற்றைப் பார்த்தலும் செய்க ; எ-று, 'தண்டளவந்தாநகக்கண்டு' என்பர் மூன்னும்.

௧௧௧. கானங் கடியரங்காக் கைம்மறிப்பக் கோடலார்
வானம் விளிப்பவண் டியாழாக—வேனல்
வளரா மயிலாட வாட்கண்ணாய் சொல்லா
யுளராகி யுய்யும் வகை.

இதுவுமது.

இ-ள். கானங் கடியரங்காகக் கோடலார் வியந்து கைம்மறிப்ப, முகில் பாட, வண்டுகள் யாழாக வேனற்காலத்துக்களியாத மயில் களித்தாடாநிற்க வாட்கண்ணாய்! சொல்லாய்; காதலரைப்பிரிந்தார் இறந்துபடாது உளராகி யுய்யுந் திறத்தை; எ-று. (௧௯)

௧௧௨. தேரோன் மலைமறையத் தீக்குழல் வெய்தாக
வாரான் விடுவானோ வாட்கண்ணாய்—காரார்
குருந்தோடு முல்லை குலைத்தனகா ணாமும்
விருந்தோடு நிற்றல் விதி.

எ-து பருவங்காட்டித் தோழி தலைமகளை வற்புறுத்தியது.

இ-ள். பகலோன் மலையின்கண் மறைய இனியகுழல் இன்னாதாய் வெய்தாக இக்காலத்தின்கண் வாரோதேவிடுவானோ; வாட்கண்ணாய்! பசுமையார்ந்த குருந்துடனே முல்லைகள் பூங்கொத்தை ஈன்றனகாண்; இனி நாமும் அவர்க்கு விருந்துசெய்தல் ஒழுகிநிற்றல் நெறி; எ-று. (௨௦)

௧௧௩. பறியோலை மேலோடு கீழா விடையர்
பிறியோலை போர்த்து விளியாக் கதிப்ப
நரியுளையும் யாமத்துந் தோன்றாரா லன்னாய்
விரியுளைமான் றேர்மேல்கொண் டார்.

எ-து பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

இ-ள். படுத்துத்துயிலும் பறி* கீழாக ஓலைப்படன் மழைத்துளியைக் காத்தற்கு மேலாக இடையர்கள் இடர்ந்து யாடுகளைப் பிறித்தற்குக் கருவியாகிய பிறியோலையைப் புடைபெயர்வித்து அழைத்தறைப்ப, நரிகள் அஞ்சிக் கதறும்

---

* 'பறியோலைச்சயனத்தர்' எனப் பெரியாரும் பணித்தார். (பெரியாழ்வார் திருமொழி, வண்ணமாடங்கள், ௫) 'மறித்தருத் தொகுத்த பறிப்புற விடையன்' என அகநானூற்றினும் (௧௪) 'பறிப்புறத் திட்ட பாலொடை யிடையன்' என நற்றிணையினும் (௧௪௨) வருதல் காண்க.

யாமத்தின்கண்ணும் தோன்றாற் றோழி! விரிந்தவுளையையுடைய மாவாற் பூட்டப்பட்ட தேரை மேல்கொண்டுபோயினர்; எ-று. (உக)

ககச. பாத்துப் படுகடன் மாந்திய பல்கொண்மூக்
காத்துக் கணை துளி சிந்தாமைப்—பூத்துக்
குருந்தே பருவங் குறித்திவளை நைந்து
வருந்தேயென் றாய்நீ வரைந்து.

எ-து பருவங்கண்டழிந்த தலைமகள்கேட்பத் தோழி குருந்தமரத் தீற்றுச் சொல்லுவாளாய்ப் பருவமன்றென்று வற்புறுத்தியது.

இ-ள். ஒலிக்கின்ற கடலைப்பருகி அந்நீரைக் காத்துக் கருமுற்றிப் பகுத்துச் செறிந்த துளிகளைச் சிதறுவதற்குமுன்பே பூத்துக் குருந்தே! பருவத்தைக் குறித்துக்காட்டி இவளையேவரைந்து வருந்துவாய் என்றாய் நீ; எ-று. (உஉ)

ககரு. படுந்தடங்கட் பல்பணைபோல் வான்முழங்கன் மேலுங்
கொடுந்தடங்கட் கூற்றமின் னாக—நெடுந்தடங்கண்
ணீர்நின்ற நோக்கி நெடும்பணைமென் றோளாட்குத்
தேர்நின்ற தென்னாய் திரிந்து.

எ-து வினைமுற்றிமீண்ட தலைமகன் தலைமகட்குத் தூதுவிடுகின்றான் றூதிற்குச் சொல்லியது.

இ-ள். ஒலியாநின்ற தடங்கண்ணையுடைய பல முரசுபோல் முகில்கள் முழக்குவதன்மேலும் மின்னே கொடியதடங்கண்ணினையுடைய கூற்றமாக அழுகின்றநீர் விடாதுநின்ற நெடுந்தடங்கண்ணோக்கினையுடைய நெடும்பணை மென்றோளாட்கு நீமறித்துவந்து நின்மனைவாயிலின்கண்ணே அவன்றேர் நின்ற தென்று சொல்லுவாய், எமக்குமுன்னேசென்று தூதாக; எ-று. (உஙு)

ககசு. குருந்தே கொடிமுல்லாய் கொன்றாய் தளவே
முருந்தே யெயிறொடுதார் பூப்பித்—திருந்தே
யரும்பீர் முலையா ளணிகுழறூஉம் வேய்த்தோள்
பெரும்பீர் பசப்பித்தீர் பேர்ந்து.

எ-து பருவங்கண்டு ஆற்றாளாயதலைமகள் ஆற்றல்வேண்டித் தோழி தான் ஆற்றாளாய்ச்சொல்லியது.

இ-ள். குருந்தே! கொடிமுல்லாய்! கொன்றாய்! தளவே! பீலிமுருந்தினை யொக்கும் இவளெயிற்றுடனே பூமாலையையும் பூப்பித்திருந்து சோங்கரும்பு

முதலாயினவற்றை வென்று சிதைக்கும் முலையினையுடையாளுடைய குழ ருழ்ந்த நிறைந்த வேய்த்தோள்களைப் பெரும் பீர்நிறம்போலப் பசப்பித்தீர் மீட்டும்; எ-று. (உ௪)

கக௭. கதநாகம் புற்றடையக் காரேறு சீற
மதநாக மாறு முழங்கப்—புதனுகம்
பொன்பயந்த வெள்ளி புறமாகப் பூங்கோதா
யென்பசந்த மென்றோ ளினி.

எ-து தலைமகளைத் தோழி பருவங்காட்டி வற்புறுத்தியது.

இ-ள். சினத்தினையுடைய பாம்புகளும் புற்றினை அடையும்வகை உரு மேறு வெகுண்டிடிப்ப, மதத்தையுடைய யானைகள் அவ்வுருமேற்றுக்கு எதிரே முழங்கப், புதலாற்சூழப்பட்ட நாகமரங்கள் வெள்ளிபோலும் இதழ்கள் புறஞ் சுற்றப் பொன்போலுந்தாதுக்களை உள்ளே பயந்தனவாதலாற் பூங்கோதாய்; நின்மென்றோள்கள் யாதுகாரணத்தாற் பசந்தன இப்பருவத்து; எ-று, (உ௫)

கக௮. கார்தோன்றிப் பூவுற்ற காந்தண் முகைவிளக்குப்
பீர்தோன்றித் தூண்டுவாண் மெல்விரல்போ—னீர்தோன்றித்
தன்பருவஞ் செய்தது கானந் தடங்கண்ணு
யென்பருவ மன்றென் றினின்று.

எ-து பருவம் அன்றென்று வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் வன்புறை யெதிரழிந்து சொல்லியது.

இ-ள். விளக்கு மழுங்கிப் பீர்நிறங்கோடலான் அவ்விளக்கினைத்தூண்டு வாள் மெல்விரலினைத் தோன்றிப்பூவின்மேற் சென்றன காந்தண்முகைகள் போலும்வகை கார்நீர்தோன்றுதலாற் காரின்பருவத்தைச் செய்தன கானங்கள், இத்தைக்கண்டும் தடங்கண்ணாய்! எனக்குக் காதலர் சொல்லிய பருவம் அன் றென்னுநின்றி ; எ-று. (உ௬)

ககக. உகவுங்கா ரன்றென்பா ரூரா ரதனைத்
தகவுந் தகவன்றென் றோரேன்—றகவேகொல்
வண்டுடுப்பாய்ப் பாம்பாய் விரலாய் வளைமுரியாய்
வெண்குடையாந் தண்கோடல் வீந்து.

இதுவுமது.

இ-ள். மழைத்துளிகள் உகவுங் கார்ப்பருவம் அன்றென்றுசொல்லா நின்றார் இவ்வூரார் : அச்சொலவுதான் அவர்க்குக் குணமோ குற்றமோ என்ப

தறியேன் : அதுதான் அவர்க்குக் குணமேகொல்லோ ! வளவிய துடுப்பாய்ப் பாம்பாய் விரலாய் வளை முரியாய் வெண்குடையாகாநின்றது தண்கோட லழிந்து; எ-று. (உஎ)

கஉ0. பீடிலா ரென்பார்கள் காணார்கொல் வெங்கதிரார்
கோடெலாம் பொன்னாய்க் கொழுங்கதிக்கா நக்—காடெலா
மத்தக கதிரோன் மறைவதன்முன் வண்டொடுதேன்
றுத்த மறையுந் தொடர்ந்து.

இதுவுமது.

இ-ள். நம்மைப் பெருமையிலரென்று சொல்லுவார் காணாதாராகாரோ ! வளவிய கொன்றைகள் கொம்பெல்லாம் பொன்னாகப் பூக்க வண்டொடு தேன்கள் தத்தம் என்னும் பண்ணினைத் தம்முட் பொருந்தி ஒலியாநின்றன காடெல்லாம்; வெய்யகதிரோடுகூடி வெங்கதிரோன் அத்தமலையை அடைதற்கு முன்னே; எ-று. (உஅ)

கஉக. ஒருத்தியா னொன்றல பல்பகை யென்மேல
விருத்தியாக் கொண்டன வேறாய்—பொருந்தின்
மடலன்றின் மாலை படுவசி யாம்பல்
கடலன்றிக் காரூர் கறுத்து.

இதுவுமது.

இ-ள். யானொருத்தி: எனக்கு ஒன்றல்ல பலபகைகள் என்னை மலைத்தலே தமக்கு ஒழுக்கமாகக்கொண்டன ; வேறாகத் துணையைப் பிரிந்து பொருந்தின் மடற்பனைமேலிருந்த அன்றில், மாலைப்பொழுது, மழைபெயல், ஆம்பற்குழல், கடல அன்றியே முகில்கள் என்று சொல்லப்பட்ட இவையெல்லாம் மேல் வெகுண்டு; எ-று. (உக)

கஉஉ. கானந் தலைசெயக் காப்பார் குழற்றோன்ற
வேன மிடந்த மணியெதிரே—வான
நகுவதுபோன் மின்னுட நாணவென் னாவி
யுகுவது போலு முலைந்து.

இதுவுமது.

இ-ள். காடுகள் தழைத்துத் தலையெடுக்க ஆயர் ஊதுங் குழலோசை தோன்ற ஏனங்கள் இடந்த மணிகளினெதிரே முகில்கள் சிரிப்பதுபோலமின்கள் ஒளிவிட இக்காலத்தும் ஆறற்றுப்படாமையான் நாணில்லாத என்னுயிர் ஒழுகுவதுபோலவுளது; எ-று. (௩0)

கசூ௩. இம்மையாற் செய்ததை யிம்மையே யாம்போலு
மும்மையே யாமென்பா ரோரார்கா—ணம்மை
யெளிய ரெனநலிந்த வீர்ங்குழலா ரேடி
தெளியச் சுடப்பட்ட வாறு.

எ-து குறித்த பருவத்தின்கண் வந்த தலைமகனைப் புணர்ந்திருந்த தலைமகள் முன்பு தன்னை நலிந்த குழலோசை அந்திமாலைப்பொழுதின்கட் கேட்டதனாற் றுயருறுதாளாய்த் தோழிக்குச் சொல்லியது.

இ-ள். *இப்பிறப்பின்கட் செய்த தீவினை இப்பிறப்பின்கண்ணே விளையும்போலும்! மறுபிறப்பின்கண் ஆம் என்பார் அறியாதார்காண்; முன்பு நம்மை எளியரெனக்கொண்டு துயர்செய்த ஈர்ங்குழலார், தோழி! எல்லாரும் அறியச் சுடப்பட்டவாற்றைப் பாராய்;* எ-று.

*குழல்நலிவது நெருப்பாற் சுடப்பட்டுத் துளைப்பட்டபின்: சூடுண்டது பிறரை நலிந்ததாற் பயனென்று குழலைச்சொல்லுமாறென்னையெனிற் பிறரை நலியுந்தன்மை முன்பே அதற்குளதாதலாற் பட்டதெனக்கொள்க.* (௬௩)

முல்லை முற்றியது.

---

# ரு.—மருதம்.

---

கசூ௪. செவ்வழியாழ்ப் பாண்மகனே சீரார்தேர் கையினு
லிவ்வகை யீர்த்துய்ப்பான் றோன்றுமு—னிவ்வழியே
யாடினு ளுய்வய லூரன்மற் றெங்கையர்தோள்
கூடினன் பின்பெரிது கூர்ந்து.

எ-து பாணற்குத் தலைமகள் வாயின்மறுத்தது.

இ-ள். *செவ்வழியாழையுடைய பாண்மகனே! சீரார்ந்த விளையாட்டுத் தேரினைத் தன் கையால் இம்மனையின்கண் ஈர்த்து நடத்துகின்ற என்மகன் பிறப்பதற்குமுன் இம்மனையின்கட் பிரியாது ஆய்வயலூரன் ஒழுகினன், பின்னை யெல்லாம் எங்கையர்தோளே மிக விரும்பி முயங்கினன்; ஆதலான் இப்பருவம் யாம் அவர்க்குத்தக்கேம் அல்லேம்;* எ-று. (க)

கசூரு. மாக்கோல்யாழ்ப் பாண்மகனே மண்யானைப் பாகனுர்
தூக்கோற் றுடியோடு தோன்றுமுன்—றூக்கோற்
றுடியுடையார் சேரிக்குத் தோன்றுமோ சொல்லாய்
கடியுடையேன் வாயில் கடந்து.

இதுவுமது.

இ-ள். அழகிய *காம்பையுடைய யாழ்ப்பாணனே! மண்ணுற் செய்யப்பட்ட யானைப்பாகராகிய என்மகனுர் தாங்கொட்டுகின்ற தூக்கோற்றுடியோடு )ங்குத்தோன்றி ஒழுகுவதற்குமுன்பு தூய புரிப்புச் செயல்களையுடைய தொடி டையார்மனையின்கட்சென்று தோன்றியொழுகுமோ சொல்லாய் இப் பொழுது அவனுல் வரையப்பட்ட வாழ்வினையுடையேன் வாயில்கடந்து; r-று. (உ)

௧உசு. விளரியாழ்ப் பாண்மகனே வேண்டா வழைபேன்
முளரி மொழியா துளரிக்—கிளரிநீ
பூங்கண் வயலூரன் புத்தில் புகுவதன்மு
ணுங்க ணறிய வுரை.

இதுவுமது.

இ-ள். விளரி யென்னும் பண்ணைச் செய்கின்ற யாழையுடைய பாண் மகனே! யாங்கள் விரும்பாதன அழைபாதொழிக: எங்கண்மாட்டு நினக்கு ஈரமில்லாத முளரிபோன்ற மொழிகளைச் சொல்லாது இங்கு நின்றும் புடை பெயர்ந்து கிளர்ந்து நீபோய்த் தாமரைப்பூப்போன்ற கண்களையுடைய வயலூரன் இன்று புதுமனையின்கண்ணே புகுவதன்முன் அப்புதுமனைக்கண் நீ சென்று வாராநின்முன் என்று அவனுற் காதலிக்கப்பட்ட பரத்தையர்க்கு உரை; எ-று. (௩)

௧உஎ. மென்கட் கழிவய லூரன்றன் மெய்ம்மையை
யெங்கட் குரையா தெழுந்துபோ—யிங்கட்
குலங்கார மென்றனுங்கான் கூடுங்கூர்த் தென்றே
யலங்கார நல்லார்க் கறை.

இதுவுமது.

இ-ள். மெல்லிய இடத்தையுடைய மிக்க வயலூரனுடைய மெய்புரை களை எங்கட்குச் சொல்லாதே இங்குநின்று மெழுந்துபோய் இவ்வுலகத்தின்கட் குலமுடைய மனையாளைப் புணர்தல் †... ............................ ...............
... ........... ..................................................................(௪)

* பாணர் தம் பிறப்புணர்த்தற்கு ஓர்வகை மூங்கிற்கோல் கைக்கோடல் பண்டைவழக்கு: இதனை "நுண்கோல் கொண்டு களம்வாழ்த்து மகவன் பெறுகமாவே" (ரு-௩) என்னும் பதிற்றுப்பத்துரையா னுணர்க; 'இருங்கழை யிறும்பி ளுய்ந்துகொண் டறுத்த, நுணங்குகட் சிறுகோல் வணங்கிறை மகளிரோ, டகவுநர்' (௬எ) என்றார் அகநானூற்றினும்.

† இதன் பின்னுரையும், இனிவரும் பாடல்களினுரையும் பிரதிகளி லில்லை. சிலபாடல்களிலும் எழுத்துக்கள் விடுபட்டும் பிறழ்ந்தும் இருப்பன.

கஉஅ. செந்தா மரைப்பூ வுறநிமிர்ந்த செந்நெல்லின்
பைந்தாட் புனல்வாய்ப்பாய்க் தாடுவா—ளந்தார்
வயந்தகம்போற் றோன்றும் வயலூரான் கேண்மை
நயந்தகன் றுற்றமை நன்று. (ரு)

கஉகூ. வாடாத தாமரைமேற் செந்நெற் கதிர்வணக்க
மாடா வரங்கினு ளாடுவா—ளீடாய
புல்லக மேய்க்கும் புகழ்வய லூரான்ற
னல்லகஞ் சேராமை நன்று. (சு)

கஙo. இசையுரைக்கு மென்செய் திரநின் றவரை
வசையுரைப்பச் சால வழுத்தீர்—பசைபொறை
மெய்ம்மருட் டொல்லா மிகுபுன லூரன்றன்
பொய்ம்மருட்டுப் பெற்ற பொழுது. (எ)

கஙக. படங்கிறவு போலும்யாழ்ப் பண்பிலாப் பாண
தொடங்குறவு சொற்றுணிக்க வேண்டா—*முடங்கிறவு
பூட்டற்ற வில்லேப்க்கும் பூம்பொய்கை யூரன்பொய்
கேட்டற்ற கீழ்நாட் கிளர்ந்து. (அ)

கங உ. எங்கை யரிலுள்ளா னேபாண நீபிறர்
மங்கையரி லென்று மயங்கிறாய்—மங்கையரி
லென்னு திறவா திவணின்னி................
பின்னரி லந்தி முடிவு. (கூ)

கஙங. பாலையாழ்ப் பாண்மகனே பண்டுநின் னையகற்கு
மாலையா ழோதி வருடாயோ—காலையாழ்
செய்யு மிடமறியாய் சேந்தாநின் பொய்ம்மொழிக்கு
நையு மிடமறிந்து நாடு. (கo)

---

'இறவுக்கலித்துப், பூட்டறு வல்விலிற் கூட்டுமுதற் றெறிக்கும்' (கசு) என அகநானூற்றினும் 'புலவுநுனைப் பகழியுஞ் சிலையு மானச், செவ்வரிக் கயலொடு பச்சிறாப் பிறழும்' எனப் பெரும்பாணாற்றுப்படையினும் வருதல் காண்க.

௫௪. கிழமை பெரியோர்க்குக் கேடின்மை கொல்லோ
பழமை பயனோக்கிக் கொல்லோ—கிழமை
குடிநாய்கர் தாம்பல பெற்றாரிற் கேளா
வடிநாயேன் பெற்ற வருள். (௧௧)

௫௫. என்கேட்டி யேழா யிருநிலத்தும் வானத்து
முன்கேட்டுங் கண்டு முடிவறியேன்—பின்கேட்
டணியிகவா நிற்க வவனணங்கு மாதர்
பணியிகவான் சாலப் பணிந்து. (௧௨)

௫௬. எங்கை யியல்பி னெழுவல்யாழ்ப் பாண்மகனே
தங்கையும் வாயு மறியாம—லிங்க
ணுளார வுளார வுவனோடிச் சால
வளார வளர்ந்த வகை. (௧௩)

௫௭. கருங்கோட்டுச் செங்க ணெருமை கழனி
யிருங்கோட்டு மென்கரும்பு சாடி—வருங்கோட்டா
லாம்பன் மயக்கி யணிவளை யார்ந்தழநாத்
தாம்ப லசையின *வாய்த் தாழ்ந்து. (௧௪)

௫௮. கன்றுள்ளிச் சோர்ந்தபால் காலொற்றித் தாமரைப்பூ
வன்றுள்ளி யன்னத்தை யார்த்துவான்—சென்றுள்ளி
வந்தையா வென்னும் வகையிற்றே மற்றிவன்
றந்தையார் தம்மூர்த் தகை. (௧௫)

௫௯. மருதோடு காஞ்சி யமர்ந்துயர்ந்த நீழ
லெருதோ டுழல்கின்ற ரோதை—குருகோடு
தாராத்தோ ருய்க்கெடுப்புந் தண்ணங் கழனித்தே
யூராத்தே ரன்றந்தை யூர். (௧௬)

௬0 மண்ணார் குலைவாழை யுட்டொடுத்த தேனமதேன்
றுண்ணாப்பூந் தாமரைப் பூவுள்ளுங்—கண்ணா
வயலூரான் வண்ண மறிந்து தொடுப்பான்
மயலூ ராவர் பகள். (௧௭)

---

* 'வாய் தாழ்ந்து' பி-ம்.

௧௪௧. அணிக்குரன்மே னல்லாரோ டாடினே னென்ன
மணிக்குரன்மேன் மாதரா ளூடி—மணிச்சிரல்
பாட்டை யிருந்தயரும் பாய்நீர்க் கழனித்தே
யாட்டை யிருந்துறையு மூர். (௧௮)

௧௪௨. தண்கயத்துத் தாமரைநீள் சேவலைத் தாழ்பெடை
புண்கயத் துள்ளும் வயலூர—வண்கயம்
போலுநின் மார்பு புளிவேட்கைத் தொன்றிவண்
மாலுமா றுநோய் மருந்து. (௧௯)

௧௪௩. நல்வய லூர னறுஞ்சாந் தணியகலம்
புல்லிப் புடைபெயரா மாத்திரைக்கட்—புல்லியார்
கூட்டு முதலுறைபுங் கோழி துயிலெடுப்பப்
பாட்டு முாலுமாம் பண். (௨0)

௧௪௪. அரத்த முடீஇ யணிபழுப்பப் பூசிச்
சிரத்தையாற் செங்கழுநீர் சூடிப்—பரத்தை
நினைநோக்கிக் கூறினு நீமொழிய லென்று
மனைநோக்கி மாண விடும். (௨௧)

௧௪௫. பாட்ட ரவம்பண் ணரவம் பணியாத
கோட்டரவ மின்னிவை தாங்குழுமக்—கோட்டரவ
மந்திரங் கொண்டோங்க லென்ன மகச்சுமந்
திந்திரன்போல் வந்தா னிடத்து. (௨௨)

௧௪௬. மண்கிடந்த வைய........மற்றப் பெரியார
பெண்கிடந்த நாளா னிகழ்ந்தொழுகப்—பெண்கிடந்த
தன்மை யொழியத் தரள மூலையினுண்
மென்மைசெய் திட்டாண் மிக. (௨௩)

௧௪௭. செங்கட் கருங்கோட் டெருமை சிறுகனையா
லங்கட் கழனிப் பழனம்பாய்ந்—தங்கட்
குவளையம் பூவொடு செங்கயன்மீன் சூடித்
தவளையுமேற் கொண்டு வரும். (௨௪)

---

* 'இது தோழி செவ்வணியணிந்துவிட்டமை தலைவன்பாங்காயினார் கூறியது' என்றார் நச்சினார்க்கினியர் (தொல். பொ. கற். ௩௭).

௪௮. இருணடந் தன்ன விருங்கோட் டெருமை
மருணடந்த மாப்பழன மாந்திப்—பொருணடந்த
கற்பொருங் கோட்டாற் கலித்துத்தந் கன்றுள்ளி
நெற்போர்வு சூடி வரும். (௨௫)

௪௯. புண்கிடந்த புண்மனுநின னீத்தொழுகி வாழினும்
பெண்கிடந்த தன்மை பிறிதரோ—........கிடந்து
செய்யாத மாத்திரையே செங்கயல்போற் கண்ணிணை
யணையர்து தானுனு மாறு. (௨௬)

௫0. கண்ணுங்கா லெண்கொல் கலவையாழ்ப் பாண்மகனே
யெண்ணுங்கான மற்றின் றிவளொடுகே—ரெண்ணிற
கடல்வட்டத் தில்லையாற் கற்பெயர் சேரா
ளடல்வட்டத் தாருளரே லாம். (௨௭)

௫௧. சேறுடுக் கிண்கிணிககாற செம்பொன்செய் பட்டந்து
நீறுடு மாபதிவ னின்முனு—வேறாய
மங்கையரி னுடுமோ மாக்கோல்யாழ்ப் பாண்மகனே
பெங்கையரி னுடலா மின்று. (௨௮)

௫௨. குலையாலும் பூணாலு *முன்கட்டாஞ் சேர்ந்த
விலையாலு மிடட குறிபை—யுலையாது
நீசிதைக்கும் வாய்ப்புதல்வ னிற்த முனைமுலைப்பா
ரார்சிதைக்கும் வேண்டா தழூஉ. (௨௯)

௫௩. துனிபுலவி யூடலி னோக்கென் றொடர்ந்த
கனிகலவி காதலினுங காணென்—முனிவகலி
னுணு நடுக்கு நளிவய லூரனைக்
காணுவெப் போதுமே கண். (௩0)

மருதம் முற்றியது

---

முனிந்தார் முனிவொழியச் செய்யுட் கண்முத்துக்
கனிந்தார் களவியல் கொள்கைக்—கனிந்தா
திணைமாலை யீடிலா வினறமிழால் யாதத
திணைமாலை கைவாத் தேர்ந்து.

திணைமாலைநூற்றைம்பது மூலமும் உரையும்

முற்றின.

---

* ‘முன்கடஞ் சேர்ந்த’ பி-ம்.

ஸ்ரீ:

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௪0 | ௨௭ | வினவேங்கை | விளவேங்கை |
| ௨௧ | ௨௭ | குறுந்தே | குருந்தே |
| ௫௭ | ௧௫ | வானேங்கும் | வானெங்கும் |
| ௪௬ | ௨௫ | கூடுங்கூர்த் | கூடுங்கூத் |
| ௪௭ | ௨௪ | சேந்தாநின் | சேர்ந்தாய்நின் |
| ௪௯ | ௨௭ | லங்கட் | வங்கட் |
| ௫0 | ௪ | புண்மனுநின் | புண்மேனு |
| ,, | ௧௮ | குலையாலும் | முலையாலும் |



# மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

## சங்கப்பதிப்பு.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானாமிர்த மூலமும் உரையும் ... ... | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி ... ... ... | 1 | 8 | 0 |
| 3. | யாப்பணியிலக்கணங்கள் (விசாகப்பெருமாளையர் பஞ்சலக்ஷண வினாவிடையினின்று எடுத்தவை) ... | 0 | 10 | 0 |
| 4. | வைத்தியசாரசங்கிரகம் ... ... ... | | | |
| 5. | பன்னூற்றிரட்டு ... ... ... | | | |
| 6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... ... | 4 | 0 | 0 |
| 7. | தோத்திரத்திரட்டு ... ... ... | | | |
| 8. | தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய. முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | ஷை இரண்டாம்பாகம் ... ... ... | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம் பாகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 9. | அபிதானசிந்தாமணி ... ... ... | | | |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் ... (நச்சினார்க்கினியருரை உரையாசிரியருரையுடன்) | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் ... ... ... | 0 | 4 | 0 |
| 12. | அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் ... ... | 0 | 8 | 0 |
| 13. | கலைசைச்சிலேடைவெண்பா ... ... ... | 0 | 5 | 0 |
| 14. | தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி ... | | | |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை ... ... ... | 0 | 4 | 0 |
| | சங்கப்புலவராற்றுப்படை உரையுடன் ... ... | | | |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) ... ... | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன ... | 0 | 1 | 0 |

## செந்தமிழ்ப்பிரசுரம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | ஐந்திணையைம்பது உரையுடன ... ... | 0 | 3 | 0 |
| 2 | கனாநூல் (5) இனியதுநாற்பது (உரையுடன்) ... | 0 | 3 | 0 |
| 3. | வளையாபதிச்செய்யுட்கள் ... ... | | | |
| 4. | புலவராற்றுப்படை (திருக்குருகூர் இரத்தின கவிராயர் இயற்றியது.) ... ... | 0 | 3 | 0 |
| 6. | நேமிநாதம் (உரையுடன்) ... ... ... | 0 | 12 | 0 |
| 7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) ... ... | | | |
| 8. | திணைமாலை நூற்றைம்பது (உரையுடன்) ... | 0 | 8 | 0 |
| 9. | அநுமானவிளக்கம் ... ... ... | | | |
| 10. | அட்டாங்கயோகக்குறள் ... ... | 0 | 2 | 0 |
| 11 * | விவசாயரசாயனசாஸ்திரச்சுருக்கம் ... ... | | | |
| 12.* | பன்னிருபாட்டியல் ... ... | | | |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை... ... | 0 | 4 | 0 |
| 14 | முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் ... ... | 0 | 2 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் ... ... ... | 0 | 3 | 0 |
| 16. | திருவாரூருலா ... ... ... | 0 | 8 | 0 |
| 17. | சுகசந்தர்சனதீபிகை ... ... ... | 0 | 12 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம் ... ... ... | 0 | 4 | 0 |
| 19. | தேவையுலா ... ... ... ... | 0 | 3 | 0 |
| 20. | நரிவிருத்தம் ... ... ... ... | 0 | 2 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் உரையுடன் ... | 0 | 6 | 0 |
| 22. | திருக்கலம்பகம் (ஷை) ... ... | | | |
| 23. | விக்கிரமசோழனுலா ... ... ... | | | |
| 24. | குருமொழிவினாவிடை ... ... ... | 0 | 1 | 0 |
| 25. | சேரமான்பெருமாள் இரட்டைமணிமாலை ... | | | |



